# கொங்கு

திங்கள் இதழ்

ஆசிரியர்: புலவர் செ. இராசு

மார்கழி 2002 டிசம்பர் 1971



திட்டபக் காட்சி

பொங்கல் மலரில் இடம் பெறுகிறது.

25 அறிவியல் வரலாற்றுத் திங்களிதழ்

# கொங்கு

சேவலங் கொடியோன் காப்ப
ஏமவைகல் எய்தின் ருல்—உலகே.

தேனடை 1 15—12—71 தேனி 12


## வணக்கம்

இந்த இதழுடன் ஓராண்டு வளர்ச்சி பெற்றுள்ளது கொங்கு இதழ்களைக் கண்டோர் பாராட்டி உரைத்த மொழிகளால், முயற்சித் துன்பத்தை மறந்து விட்டோம்.

விற்பனையில் வளர்ச்சி இருந்ததே தவிர, விரைவு இல்லை; காலப்போக்கினை ஒட்டிக் கவர்ச்சிக் கதைகளும், திரைப்படச் செய்திகளையும் சேர்த்துக் கொள்ளுமாறு பரிந்துரைத்தவர்கள் பலர். இன்று தமிழ்நாட்டில் எல்லா ஏடுகளும் அவ்வாறே வருகின்றன. அதனல் அவற்றுடன் போட்டி போட இயலுமா? நல்ல சரக்கு என்றும் விலையாகும். எனவே பாதை மாருமல் பதனமாக நடை போடுகிறது கொங்கு.

சென்ற ஆண்டு முதல் இதழ் வருமுன்னரே பெருத்த அளவில் சந்தாக்கள் திரட்டி, தொடக்க காலத் தயக்கத்திலிருந்து கரையேற்றி விட்ட தோழர்கள், நண்பர்கள் முயற்சி என்றும் போற்றத் தக்கது. அவர்களின் அன்புக்கும், அயராத முயற்சிக்கும் நன்றி சொல்லி, அடுத்த ஆண்டை வரவேற்கிருேம்.

அன்றன்று மறந்து போகும் செய்திகளைக் குறைத்துக் கொண்டு, என்றும் நிலைக்கும் அரிய கருத்துக்களைத் தொடர்ந்து தருவோம். இந்த இதழுடன் சந்தா நிறைவுறும் வாசகர்கள் விரைவில் அடுத்த ஆண்டுச் சந்தா அனுப்பி ஆதரவு தரவேண்டும். பணம் அனுப்பத் தாமதமாகு மென்ருல், கடிதம் மூலம் தெரிவியுங்கள்; நிறுத்தாமல் அனுப்புவோம். உங்கள் நண்பர்களுக்கும் அறிமுகப் படுத்தி ஆதரிக்கவேண்டுகிருேம்.

அடுத்த இதழ் பொங்கல் மலராக பல சிறப்புக் கட்டுரைகளுடன் வெளிவரும். அதிகப்பக்கங்கள் அதே விலை. பொங்கலன்றே கிடைக்கும்.

— ஆசிரியர்.

# காயலில் குதிரை வாணிபம்

அ. அப்துல் மஜீத் M. A.

பொருநை ஆறு கடலோடு கலக்கும் இடத்திற்கு ஒரு கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது ஒரு சிற்றூர். அச்சிற்றூர் வரலாற்றில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றிருந்தது. அவ்வூர்ப்பெயர் பழைய காயல். அவ்வூரைச் சுற்றிமஞ்சள் நீர் காயல், புன்னைகாயல் காயல்பட்டிணம் என்ற ஊர்கள் இருக்கின்றன. அகநானூறில் (366.5) "காயல்" என்ற சொல் உப்பளம் என்ற பொருளில் கையாளப்பட்டிருக்கின்றது. அதற்கேற்றாற்போல் இவ்வூரைச் சுற்றி உப்பளங்கள் மிகுந்து காணப்படுகின்றன. இவ்வூரைச் சுற்றி உப்பளங்கள் நிறைந்துள்ளகாரணத்தால்தான்இவ்வூர்காயல் என்ற பெயரைப் பெற்றிருக்கவேண்டும்.

இராசராச சோழன், பாண்டியர், நாயக்கர் கால காசுகள் முதலியன கண்டெடுத்ததாக கால்டுவெல் பெருமகனார் குறித்துள்ளார்.

அவ்விடத்தில் காணப்படும் சுடுமண்பொம்மை, வழவழப்புள்ள சிவப்பு நிறபானை ஓடுகள், சங்குகள், பீங்கான் ஓடுகள் இச்சிற்றூரின் பழமையின் சிறப்பையே நினைவுப்படுத்துகின்றன. சங்குகளையும், முத்துச்சிப்பியினுடைய ஓடுகளையும் கண்டவுடன் மார்க்கோபோலோவின் நினைவு வரும். கி. பி. 1293 ஆம் ஆண்டு பிற்காலப் பாண்டிய மன்னனாகிய மாறவர்மன் குலசேகரப் பாண்டியன் காலத்தில் (1268-1310) பாண்டிய நாட்டிற்கு வந்த ஒரு இத்தாலிய வரலாற்றாசிரியன் மார்க்கோபோலோ. அவன் தன்னுடைய குறிப்பில் இக்காயல் ஒரு துறைமுகப் பட்டிணமாக விளங்கியது என்றும், அங்கு அழகிய பெரிய முத்துக்கள் கிடைத்தன என்றும், மேலும் இவ்வூர் ஒரு தலைச்சிறந்த பெரிய நகரமாக விளங்கியது என்றும், மேலை நாடுகளான ஹோர்மாஸ் (Hormos) கிஸ் (பாரசீக வளைகுடாவிலுள்ள ஒரு தீவு) ஏடன் (அரேபிய நாட்டிலுள்ளது) முதலிய நாடுகளிலிருந்து வந்த கப்பல்கள் குதிரைகளையும் மற்ற பொருள்களையும் ஏற்றிக்கொண்டு வாணிபத்திற்காக இக்காயல் என்ற நகரத்திற்கு வந்தன என்று குறிப்பிட்டுள்ளான். (a)

---

கட்டுரை ஆசிரியர் தமிழகத்
தொல்லியல் துறையில்
கல்வெட்டாய்வாளராகப் பணியாற்றுகிறார்.

ஆகவே இக்காயல் துறைமுகத்தில் பன்னிரண்டாம் நூற்றுண்டிலும் பதின் மூன்றும் நூற்றுண்டிலும் குதிரை வாணிபம் நடந்தது புலனுகும். இவ்வாணிபத்தினை நடத்துவதற்கு உதவியாய் இருந்தவர்கள் யார்? அவர்களே குதிரைச் செட்டிகள்! தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, தென் ஆற்காடு மாவட்டங்களில் கிடைக்கப் பெற்ற கல்வெட்டுகளில் அவர்களுடைய பெயர்கள் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. மூன்றும் இராசராசனின் (கி. பி. 1216-1256) பதினெறன்றும் ஆண்டு திருவலஞ்சுழி கல்வெட்டு குதிரைச் செட்டி கோவிந்தன் என்பவனைக் குறிபபிடுகின்றது. அவன் இறைவன் திருவலஞ்சுழி உடையார்க்கும், இறைவி வண்டு வாழ்குழலி நாச்சியார்க்கும் அன்றுட வழி பாட்டிற்கு நிலத்தை நன்கொடையளித்ததைக் குறிக்கின்றது. (b) இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி. பி. 1238-1255) திருவரங்கம் கல்வெட்டு, மலைமண்டலம் வணிக குழுவைச் சேர்ந்த குளமுக்கு நாவாயன் கொண்ட நம்பி என்ற குதிரைச்செட்டி திருவரங்கத்து இறைவன் அழகிய மணவாள பெருமாளை வழிபடுவதற்கு உண்டான சிலவுகளுக்கு குமாரநம்பி நல்லூர் என்ற ஒரு கிராமத்தையே கொடையாக அளித்ததைக் குறிக்கின்றது. இக்கல்வெட்டுகளிலிருந்து காணப்படும் குதிரைச் செட்டிகளை யாவரும் மலைமண்டலத்து (திருவாங்கூர்) வணிக குழுவைக் சேர்ந்தவர்கள். அவ்வணிகக் குழுவின் தலைமை இருப்பிடமாக மலைமண்டலம் விளங்கியது என்பதும் அறியத்தக்க ஒன்றுகும். (c)

பாண்டிய நாட்டின் வருமானத்தில் பெரும் பகுதி குதிரை வாங்குவதில் செலவிடப்பெற்றது. இக்குதிரைகள் அரசனுக்கும், நாட்டின் படைக்கும் வாங்கப்பெற்றன. கிஸ், ஹோர்மோஸ், டோபர், சோர், ஏடன் முதலிய மேலை நாடுகளிலிருந்து காயல் துறைமுகம் வரப்பெற்ற குதிரைகளின் ஒவ்வொன்றின் விலை 500

பொன் சக்கி (Saggi) ஆகும். பாண்டிய அரசன் ஒவ்வொரு வருடத்திற்கும் இரண்டாயிரம் குதிரைகளுக்குமேல் வாங்கினன். இக் குதிரைகள் தென்னிந்திய தட்பவெட்பநிலையால் பாதிக்கப்பட்டு இறந்தன. இதனல் நாட்டின் செல்வம் பெருமளவிற்கு மேலே நாட்டிற்கு சென்று விட்டது.

இத்தகைய பழம் பெரும் சிறப்பினையுடைய இக்காயல் என்னும் துறைமுகப் பட்டிணம் இப்பொழுது ஒரு சிற்றூராக பழைய காயல் என்ற பெயரில் காட்சியளிக்கின்றது. இங்கு அகழ்வாய்வு நடப்பின் காயலின் வரலாற்று சிறப்பினை நன்கு அறிய இடமுண்டு.

சங்க காலத்துப் பாண்டியர்களின் ''புகழ் மலி சிறப்பிற் கொற்கை முன்துறை அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து'' வளமிக்க பகுதியாக விளங்கி, பின்னை காலச்சூழ் நிலையால் கொற்கையை விட்டு அலைகடல் விலகியதால் கொற்கை தன் சிறப்பை இழந்தது போன்றே பன்னிரண்டு பதின்மூன்றும் நூற்ருண்டில் பாண்டியர்களின் துறைமுகப் பட்டிணமாக விளங்கிய காயலும் தன் சிறப்பை இழந்தது.

(a) Yule and doridier, op, cit; II, p, 331,
(b) ARSIE 1927-28; No. 196
(c) ARSIE, 1936-37; No. 77



நெடும்புனலுள் வெல்லும் முதலை அரும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.

# வடக்கு அறிதல்

Er. D. பலராமன் B. E.

வடக்கிருத்தல் என்பது தமிழ் பயின்றோருக்கு மிகவும் பழக்க மான சொல். நமது பெரியோர் ஏதாவதொரு காரணம் பற்றி உயிர் நீக்க நினைத்தால் வடக்கு நோக்கி அமர்ந்து அன்னம், நீர் இன்றி நோன்பு காத்து உயிர்விடுவர். கரிகாற் பெருவளத்தான் எய்த அம்பு சேரமன்னனின் நெஞ்சை ஊடுருவி முதுகு வரை வந்து விட்டது. அப்போதும் உயிர்போகவில்லை. வீரர்களுக்கு முதுகில் புண் படுதல் இழுக்கல்லவா ? அதனால் நாணம் கொண்டு வடக் கிருந்து உயிர்நீத்தாரம். அது போகட்டும்.

### திசை அறிதல்

வடக்கு திசையை அறிந்து கொள்வது எவ்வாறு ? தொடக்கப் பள்ளியில் படித்ததை மீண்டும் நினைவு கூறுவோம். காலையில் தோன்றும் பகலவனை நோக்கி நின்று கொண்டு, கைகளை விரித்தோ மானால் இடதுகைப் பக்கம் வடக்காகும். ஆனால் இது மிகவும் தோராயமானது. பகலவன் எப்போதும் நேர் கிழக்கில் உதிப்ப தில்லை, சற்றே இருதிசைகளிலும் மாறிக்கொண்டே இருக்கும்.

வீடுகளை அமைப்பதற்கும், நகரங்களைத் திட்டமிடவும், வேறு பல பணிகளுக்கும் வடக்குத் திசை அறிதல் மிகவும் இன்றியமை யாதது. கடலிலும், வானத்திலும் செல்வோருக்கும், திசை தெரிய வேண்டும்.

### வடமீன்

வடக்குத்திசை அறிய சில எளிய வழிகள் உள்ளன. வானத் தில் தெரியும் வடமீனைப் பார்த்து இரவில் வடக்குதிசை அறிய லாம். பூமி கதிரவனைச் சுற்றிவருவதோடு, தன்னைத்தானே சுற் றிக்கொள்வதை அறிவோம். பூமியின் வடதென் துருவங்களை இணைக்கும் கற்பனைக் கோட்டை வடதிசையில் நீட்டினால், அது கிட்டத்தட்ட வடமீனை ஒட்டிச் செல்லும், அதனாலேயே பூமியின் சுழற்சியால் பிற மீன்கள் தன் இடம் மாறினாலும், வடமீன் மட்டும் அதே நிலையிலேயே இருக்கின்றது. வானத்தில் வடமீனை அடை யாளம் காண, இன்னொரு குறிப்பும் உதவும். பூமியில் நாம் இருக் கும் இடத்தின் நேர்வரை (Latitude) எவ்வளவு பாகையோ,

---

கட்டுரை ஆசிரியர் அழகப்பர் நுட்பவியல் கல்லூரியில் பல்கலைக் கழகப் பொறியாளராகப் பணியாற்றுகிறார்.

அதே பாகை அளவு ஏற்றக்கோணத்தில் அடிவானத்திலிருந்து உயரே வடமீன் இருக்கும். சான்ருக, கோவையின் நேர்வரை 11° வடக்கு. கோவையிலிருந்து, சுமாரான வடக்குத் திசைநோக்கி 11° உயரப் பார்த்தால் தெரிவது வடமீன் ஆகும். முதலில் வடமீனைச் சண்டு பிடித்துக் கொள்ளவேண்டும் ஓர் உயரமான கம்பை நிலத்தில் நட்டமாக ஊன்றிக் கொள்ளவேண்டும். இன்னொரு கம்பைக் இரண்டு கைகளாலும் நமது முகத்திற்கு நேர் நட்டமாகப் பிடித்துக்கொண்டு வடமீன், முதல் கம்பு, இரண்டாவது கம்பு, மூன்ருவது கம்பு மூன்றும் ஒரே நேர் இருக்குமாறு பார்த்துக் கொண்டே இரண்டாவது கம்பை ஊன்றிக்கொள்ள வேண்டும். ஊன்றிய பின்னர் ஒரு தடவை பார்த்து, உறுதிசெய்து கொள்ள வேண்டும். இப்போது இவ்விரு கம்புகளையும் இணைக்கும் கோடு சரியான தென் வடல் திசையில் இருக்கும்.

நிழல் முறை

பூமி தன்னைத்தானே சுற்றும் அச்சு, செங்குத்தாக இல்லாமல் $22\frac{1}{2}$ பாகை சாய்ந்துள்ளது. அதனுல் ஓர் ஆண்டில் பல பருவ காலங்கள் வருகின்றன, கதிரவன் நேர்கிழக்கிற்கு வடக்காக ஆறு மாதமும், தெற்காக ஆறுமாதமும் இருப்பது போலத் தோற்றம் நமக்கு ஏற்படுகிறது. இந்த உண்மையைப் பயன்படுத்தியும் திசை அறியலாம்.

ஒரு சமமான, மட்டமான தரையில், ஒரு நேரான கழியை நட்டு வைக்க வேண்டும். அதைச் சுற்றி, இரண்டு அடி, நான்கு அடி, ஆறு அடி, எட்டு அடி. விட்டமுள்ள நான்கு வட்டங்கள் வரைந்து கொள்ளவேண்டும். காலை ஏழு, எட்டு, ஒன்பது, பத்து. மணிகளிலும், பிற்பகல் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து மணிகளிலும், அக்கழியின் நிழல் இந்த வட்டங்களில் படியும் இடங்களைக் குறித்துக் கொள்ளவேண்டும். நன்பகலுக்கு, முன்னும், பின்னும் சமகால அளவில் பட்ட நிழல், ஏதாவது ஒரு வட்டத்தின் இரு பக்கங்களிலும் குறிக்கப் பட்டிருக்கும். அந்த இரண்டு புள்ளிகளையும் இணைத்தால் ஒரு நேர் கோடு கிடைக்கும். அந்த நேர் கோட்டின் நடுப்புள்ளியை கழியுடன் இணைத்தால் கிடைப்பது தென் வடல் கோடு ஆகும்

ஒரு வட்டத்தில் இவ்வாறு கிடைத்த கோடும், இதேபோல பிற வட்டங்களில் கிடைக்கக் கூடிய கோடுகளும் ஒன்றின் மீது ஒன்று படியும். இதுவே கோடு சரியான தென்வடல் திசையில் அமைந்துள்ளது என்பதை உறுதிப் படுத்தும்.

காந்த ஊசி

காந்த ஊசி தென்வடல் திசை காட்டும் என்பதை அறிவோம். ஆனால் அது சரியான வடக்குத் திசையைக் காட்டும் என்று சொல்ல முடியாது. காந்த ஊசி காட்டும் தென்வடல் திசை, அசல் தென் வடல் திசையை விட்டுச் சற்றே நழுவி இருக்கும். இந்த நழுவல் இடத்துக்கு இடம், நாளுக்கு நாள் மாறுபடும். இதை காந்தத் தாழம் (Declination) என்பர். அவ்வப்போது காந்தப் புயல் வீசும் காலத்திலும், முனைப் பேரொளி (அரோரா பொரியாலிஸ்) தோன் றும் காலத்திலும் காந்த ஊசி திசை காட்டத் தடுமாறும். மேலும் இரும்புத்தாது நிறைந்த இடத்திலும் அருகில் இருப்புப் பொருட் கள் இருக்குமிடங்களிலும் அவற்றின் ஈர்ப்பால், இழுபட்டுவழுவும். இங்கெல்லாம் திசையறியும் போது சற்றே கூடுதல் கவனம் தேவைப்படும்.

காந்த ஊசி காட்டும் திசை தோராயமானதாக இருந்தாலும், மிகவும் எளிதானது, சிறிய அளவு காந்த வட்டைகள், கையில் எடுத்துச் செல்லலாம்; திக்குத் தெரியாத காடு, திரைகடல், வெளி வான் எங்கும் எளிதாகத் திசை அறியலாம். நில அளக்கை (Survey)களில் கோணங்கள் அளப்பதற்கும் காந்த வட்டை பயன் படுகிறது. ஃ

---

# வள்ளுவரின் ‘எச்சம்’

*தக்கார் தகவிலர் என்பது அவரவர்*
*எச்சத்தாற் காணப்படும்*

எச்சம் என்ற சொல்லுக்கு, ஒருவர் விட்டுச் சென்ற பொருள், அவர்தம் மக்கள், என்றவாறு பொருள் கொண்டு, இவற்றிலிருந்து முன்னவர் தக்காரா, தகவிலரா என்று முடிவு செய்ய வேண்டும் என்று புலவர்கள் கூறுவர்.

அதைவிட எச்சம் என்பதை ‘எஞ்சிய காலம்’ என்று பொருள் கொண்டால் சிறப்பாக இருக்கும். ஒருவர் தன்மையை, அவர் வாழ்ந்து கொண்டிருக்கிற இந்தக் காலத்திலேயே முடிவு சொல்ல இயலாது. அவரது வாழ்க்கையில் இன்னும் எஞ்சிய காலத்தில் எப்படி இருப்பார் என்று இப்போது சொல்ல இயலாது. நடுநிலை யாளராகவும் வாழ்ந்து காட்டலாம் ; அல்லது நெறிதவறிப் போய் விடவும் வாய்ப்புண்டு. எனவே ஒருவர் தக்காரா, தகவிலரா என் பதை முடிவுசெய்ய அவருடைய எஞ்சிய கால வாழ்க்கையையும் காணவேண்டும். அதே போல,

*செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி*
*எச்சத்திற்கும் ஏமாப்பு உடைத்து*

என்ற குறளிலும் எச்சம் என்பதற்கு ஒருவனுடைய எஞ்சிய காலம் என்றே பொருள் கொள்ளலாம். தள்ளாத முதுமைப் பருவத்தில் அவன் செல்வம் குறையாமல் இருப்பதே பெரும் பேறு அல்லவா ?

—கொடியன்

# செய்யாற்றின் கரையினிலே செங்கம்

ம. சந்திரமூர்த்தி எம். ஏ.,

வட ஆற்காடு மாவட்டத்தில் சவ்வாது மலை அடிவாரத்தில் ஏறத்தாழ கரை வழியே 8-கல் தொலைவில் செய்யாற்றின் கரையில் அமைந்துள்ள ஊர் செங்கம். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இவ்வூர் நன்னன் என்ற மன்னனின் கோநகராக விளங்கியது. இதனையே 'செங்கண்மா' என்று இலக்கியம் கூறும். இந்நகரைச் சூழ்ந்து ஓங்கிய மதிலும், குளிர்ந்து நெடிய பொழிலும், மலையன்ன உயர்ந்த மாடமும், ஆறு கண்டன்ன அகன்ற தெருவும், ஆழ்ந்து அகன்ற அகழியும் மாற்றுரைத் தடுக்கும் பேரரணும், அரசன் அரண்மனையும் அமைந்திருந்தன என இலக்கிய வழி அறிகிறோம். இதுவே பண்டு தொண்டைமண்டலத்தின் ஒரு பகுதியாகவும் விளங்கியது. இச் செங்கண்மா காலப்போக்கில் 'செங்கம்மா, என்றும் 'செங்கைமா' என்றும் 'செங்கம்' என வழங்கலாயிற்று என வரலாற்று ஆசிரியர் குறிப்பர். செய்யாற்றின் கரையில் உள்ள நன்னன்மேடு என்ற அழிந்து ஒழிந்த மாபெரும் மண்கோட்டைப் பகுதி செங்கத்தைச் சார்ந்ததாகும். இந் நன்னன் மேடு அக்காலத்தே பல்குன்ற கோட்டத்தில் அமைந்திருந்தது. இதனை 'பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மா' என்று இலக்கியம் கூறும். சவ்வாது மலையின் அடிவாரத்தில் உள்ள ஆனந்தவாடி காட்டில் உள்ள பரமேஸ்வரவர்மன் காலத்து நடுகல்லும் பல்குன்றக் கோட்டத்தை குறிக்கிறது. மற்றும் 'செங்கம்மா உடையார் திருஇடத்துறை, நாயனார்க்குச் செங்கைமா' என பிற்கால கல்வெட்டுகளும் குறிப்பது நோக்கத்தக்கதாகும். இப்பல்குன்றக் கோட்டத்தில் போளூர், திருப்பத்தூர், தேவிகாபுரம், செங்கம் ஆகிய வட்டங்கள் அடங்கியிருந்தன என நவிரமலைப் பகுதியில் உள்ள பிற்காலக் கல்வெட்டுகள் அறிவிக்கின்றன. கி. பி. 5-ஆம் நூற்றாண்டு முதல் 15-ஆம் நூற்றாண்டு ஈறாக இப்பகுதியில் பல்லவர், சோழர், பாண்டியர், விசய நகர மன்னர்கள் கோலோச்சிய வரலாற்றுச் சுவடுகளை உணர்த்தும் பழைய சின்னங்களும், சிற்பங்களும், கல்வெட்டுகளும் காணக்கிடக்கின்றன. இவ்வூரைச் சார்ந்த பெரும்பட்டினம், அரசன் கண்ணி, பாரணவூர் (பந்துரு), களத்தூர், காயம்பட்டு என்ற ஊர்கள் இந்நகர் அன்று இருந்த பெருமையை எடுத்து உரைக்கின்றன. செங்கம் வட்டத்தில் உள்ள அந்தனூர். பரமனந்

---

கட்டுரை ஆசிரியர், தமிழகத் தொல்லியல் துறையில் கல்வெட்டு ஆய்வாளராகப் பணியாற்றுகிறார்

தல் ஆகிய சிற்றூர்களில் புதைந்து கிடக்கும் கருப்பு-சிகப்பு பானை ஓடுகளும், சுடுமண் பாவைகளும், செய்யாற்றின் கரையில் கிடைக்கும் பழையச் சின்னங்களையும் நோக்கும் பொழுது சங்க காலத்தில் சிறப்புப் பெற்ற திருநகராக விளங்கியது என அறிய முடிகிறது.

நன்னனின் மலை நாட்டுப் பகுதியான சவ்வாது மலைத்தொடர் திருப்பத்தூருக்குத் தென்மேற்கே தொடங்கி தென்கிழக்கே சிங்காரப் பேட்டை வரை சுமார் 35-கல் தொலைவில் பரவியுள்ளது. இம் மலைப்பகுதியில் பாணர் முதல் மலையரண் முதலிகள் ஈராக பலர் வாழ்ந்தனர் என்பதை இலக்கியமும் கல்வெட்டுகளும் விரித்துக் கூறும். இம்மலைப் பகுதியில் 100ச்கும் மேற்பட்ட சிற்றூர்கள் அமைந்துள்ளன. இத்தொடரில் உள்ள நவிரமலை நன்னனுடைய மலைநாட்டைச் சேர்ந்த பகுதியாகும். நவிரம் என்ற நவிரமலை இன்று பர்வதமலை என்றும் திரிசூலகிரி என்று அழைக்கப்படுகிறது. மலைபடுகடாத்தில் குறிக்கப்படும் நவிரமலை, 13-ம் நூற்றூண்டுக் கல்வெட்டிலும் குறிக்கப்படுவது சிறப்புடையதாகும்.

நன்னனின் மலையான நவிரமலையில் தான் செய்யாறு தொடங்குகிறது. இலக்கியங்களில் சேயாறு என அழைக்கப் பெற்றது இன்று செய்யாறு என வழங்கப்பெறுகிறது. செய்யாற்றின் கரையில் தான் பல பல்லவர்கால நடுகற்கள் கிடைத்துள்ளன. இவ்வாறே ஆனந்தவாடி காட்டில் உள்ள செங்கழனி யாற்றின் கரையிலும் சில நடுகற்கள் கிடைத்துளள்ளன. இதை நோக்கின் பல்லவசோழர் காலத்தில் இப்பகுதி போர்க்கள மையமாக இருந்திருக்க வேண்டும் எனக் கருத இடமுள்ளது. இப்பகுதியில் சங்க காலத்தில் போர் நடந்ததையும், அப்போரில் விழுப்புண்பட்டு



நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடு நீரார் காமக் கலன்.

மாண்ட வீரர்களுக்கு நடுகற்கள் நட்டதையும், அக்கல்லை பாணர் குழாம் பாடி மகிழ்ந்ததையும் இலக்கியம் கூறும் இதனையே 'நல்லிசைப் பெயரொடு நட்டகல்' என மலைபடுகடாம் புகழ்ந்து பாடும்.

சவ்வாது மலைத்தொடர்ச்சியில் உள்ள பெரியமலை, சின்னமலை தென்மலை, ஆதிட்டைமலை, ரெட்டியாமலை. பெருமாள்மலை, முல்லைக்காட்டுமலை, என்ற மலைப்பகுதிகளிலும், ஆனந்தவாடிகாடு, துரிஞ்சாபுரக்காடு, கீாவாடு (காவற்காடு), செங்கம்மாகாடு போன்ற குறிஞ்சி முல்லைப் பகுதிகளிலும் சில பலநடுகற்கள் கிடைத்துள்ளன. இவையாவும் மகேந்திரவர்மன், நரசிம்மவர்மன், நந்திச்சுரன், முதல் பராந்தகன் காலத்தவையாக உள்ளன. இப்பகுதியைச் சார்ந்த அல்லியேந்தல். ஆயிமனந்தல், வேலன் ஏந்தல், வீரன் ஏந்தல், பரமனந்தல், நந்தல், ஏந்தல், சினந்தல், ஆனந்தல் ஆகிய ஊர்கள் இந்நகர் அன்று வாழ்ந்து செழித்து வளம் கொழித்த பெருமையினை உணர்த்துகின்றன. இப்பகுதியில் இருந்த நடுகற்கள் யாவையும் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை பார்வையிட்டுப்படி எடுத்துள்ளன.

ஆதலின் அற்றைஞான்று சேயாற்றின் கரையில் அமைந்த செங்கண்மாவே இன்று செய்யாற்றின் கரையில் உள்ள செங்கம் என்றும், நன்னன் கோலோச்சிய தலைநகர் என்றும் யூகித்து அறியலாம். ஃ

---

# தேர்வு

பள்ளிகளில் தேர்வு முறை முழுக்கத் தோற்றுப் போய் விட்டது என்பது வெள்ளிடைமலை. பள்ளி இறுதித் தேர்வில் அதிக விழுக்காடு தேர்வு வேண்டுமெனக் காரணம் காட்டி, அதற்கு முந்திய வகுப்பில் வடிகட்டுதல் என்னும் கொடுமையைச் சில உயர் பள்ளிகள் தெரிந்தே செய்கின்றன. நிறுத்தப்பட்ட மாணவர்களில் பலர் திறமைசாலிகளாகவே உள்ளனர். சற்று கூடுதல் பயிற்சியுடன் இறுதித் தேர்வையும் வெல்ல, வல்லவர்களே! பெரும்பாலான வேளைகளில். தேர்வுகள் மாணவர்களின் திறமையைக் காட்டுவதை விடத் தேர்வாளர்களின் மனமாச்சரியங்களையே காட்டுகிறது.

ஆந்திர முன்னாள் முதல்வர், இதை முழுதும் உணர்ந்து, உயர் பள்ளிகளில் இடைத்தேர்வே வேண்டாமென்று ஆணையிட்டுள்ளார். தமிழகக் கல்வி இயக்குநரும் தொடக்கப் பள்ளிகளில் தேர்வு முறையை நிறுத்துமாறு பரிந்துரை செய்ய விழைகிறார். விரைவில் தமிழகமும், ஆந்திரத்தைப் பின்பற்ற வேண்டிய நிலைமையே உள்ளது.

---

# மாமழை போற்றுதும்

சி. முருகேசன் L.C.E.,

மாமழை போற்றதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி உலகிற்கு அவனளிபோல்
மேநீன்று தான் சுரத்தலான்

---

என்ருர் இளங்கோ அடிகள். தெரிந்து சொன்னுரோ, தெரியாமல் சோன்னுரோ, தெரியவில்லை. மன்னன் கருணை இல்லாவிட்டாலும் தொல்லை ; மிக அதிகமாக இருந்து விட்டாலும் வம்பு. அதுபோல மழை இல்லாவிட்டாலும் தொல்லை ; அளவுக் கதிகமாகப் பெய்தாலும் தொல்லை. மழையுடன் புயலும் சேர்ந்து கொண்டால் கேட்க வேண்டியதே இல்லை.

உணவுப் பெருக்கத்திற்கு இன்றியமையாதது தண்ணீர். அதனுல் விவசாயி மழையைப் பற்றி அதிகம் அறிந்திருப்பது இயல்பு தானே.

நமது விவசாயிகள் மழையை உழவுக் கணக்கில் அளந்தனர், ''ஓர் உழவு'' மழை பெய்தது என்பர். அதாவது மழை நீர், ஒரு கலப்பையின் உழவு ஆழம் வரை நிலத்தை ஈரமாக்கியிருந்தது என்று பொருள். அது அனுபவ அறிவு; தோராயமானது. இப்போது அங்குலம் அல்லது மில்லிமீட்டரில் சொல்கிருேம். ஒரு சிறு பரப்பில் பெய்யும் மழை அந்தப் பரப்பில் எவ்வளவு உயரம் தங்கும் என்பதே மழை அளவு ஆகும். மழைமானிகள் மூலம் துல்லியமாக அளக்கலாம். பக்கங்கள் செங்குத்தாக உள்ள ஒரு பாத்திரம் அல்லது டப்பாவை மழைத்துளிகள் தடையில்லாமல் விழும் இடத்தில் வைத்து விட்டால், மழை நின்றதும் நீரின் ஆழத்தைத் தோராயமாக அறிந்து கொள்ளலாம்.

பெய்யும் மழையில் ஒரு பகுதி நிலத்திற்கு உள்ளே இறங்கி விடுகிறது. ஒரு பகுதி பெருகி வெள்ளமாக ஓடுகிறது. பள்ளங்கள், ஓடைகள், சிற்ருறுகள் காட்டாறுகள் நிரம்பி வழிந்து ஓடுகின்றன. இவைகளின் குறுக்கே அமையும், பாலங்களின் கண்கள் பெருவெள்ளக்காலங்களில் முழுவதையும் அனுப்பக் கூடிய அளவுக்குப் பெரிதாக அமைக்க வேண்டும். வெள்ளம் பாலத்தில் வழிந்து போகுமாறு இருக்கும் காலங்களில் தான் அவை உடைந்து விடுகின்றன.

இவ்வாறு ஓடும் தண்ணீர் ஆங்காங்கு ஏரிகள், குளங்கள், அணைகள் போன்றவற்றில் தேக்கிவைக்கப்பட்டுப், பின்னர் ஆண்டு முழுவதும் வேளாண்மைக்குப் பயன் படுத்தப் படுகின்றன. பெரு

வெள்ளம் வரும் காலங்கள் அவற்றைத் தேக்கி அதன் ஆற்றலைக் குறைப்பதால் அணைகள் வெள்ளத் தடுப்பு சாதனங்களாக பயன் படுகின்றன.

ஆறுகளில் கலிங்கல் கட்டப்பட்டு இருக்கும். இவை ஆற்று நீரை கால்வாய்களில் அனுப்பி வைத்து, ஆற்றின் சீற்றத்தைக் குறைக்கின்றன.

ஆறுகளில் கட்டப்படும் கலிங்கள் மூலம் வாய்க்கால்களில் தண்ணீர் எடுத்து விவசாயத்திற்குப் பயன்படுத்துகிறோம். தொடர்ச்சியாகத் தண்ணீர் வராத ஆறுகளில், எடுக்கும் வாய்க் கால்கள் ஏரியை, குளங்களை நிரைப்பதற்குப் பயன் படுகின்றன. ''காஞ்சி'' என்றழைக்கப்படும் நோய்யலாற்றில் இதுபோல தொண் ணூற்று ஆறு அணைகள் இருந்தனவாம்.

தமிழ் நாட்டில் தண்ணீர் தேக்கிவைக்கக் கூடிய இடங்களெல் லாம் அநேகமாக முடிந்து விட்டதால், நிலத்திற்குள் இறங்கிய நீரை வெளியே கொண்டுவர முனைந்துள்ளோம். அதற்காக ''ஒன்றிய நாடுகளின் பேரவை'' (U.N.O.) நமக்கு உதவி செய்கி றது. நிலத்தடி நீர் ஆய்வு தமிழ்நாடு முழுவதும் நடைபெற்று வருகிறது. மூன்றாண்டுகட்கு முன்னர் வந்த வரட்சியில், சென்னை தொழிற்சாலைகளுக்கு வேண்டிய தண்ணீத் தேவையை நிலத்தடி நீரே ஈடுகட்டியது.

தமிழ் நாட்டில் பல இடங்களில் நிலத்தடி ஏரிகள் பல கண்டு பிடிக்கப் பட்டுள்ளன. அவற்றை விரைவில் பயன் படுத்தும் வேளை வந்து விட்டது.

புஞ்சை நிலங்கள் 'வானம் பார்த்த பூமி' என்று அழைக்கப் படுகின்றன. மழை நீரை நம்பியே அவற்றில் வேளாண்மை நடைபெறுகின்றன. நஞ்சை நிலங்கள். பாயும் நீரினுல் விளைந்த போதிலும், மேமழையின் நன்மை வியக்கத் தக்கது. வான மண் டலத்தில் உயிர்வளியைப்போல நான்கு பங்கு நைட்ரசன் வளி கலந்துள்ளது. மழை நீரில் நைட்ரசன் கலந்து உரமாகப் பயன் படுகிறது. மேலும் உழவடைக் காலங்களில் இரண்டு நாள் பாயும் நீரின் வேலையை அரைமணி நேர மழை ஈடுசெய்துவிடும். மேமழை இல்லாத உழவடைக் காலங்களில் தண்ணீர் பங்கீடு பெரும் பாடாகிவிடும்.

மழை இல்லாக் காலங்களில் நமது கிராமப் புறங்களில், மழை வேண்டி இளம்பெண்கள் ஆடிப்பாடுவர். பாவிகள் மலிந்து விட்டதால் மழை இல்லை என நம்பி, முழுநிலா உள்ள இராக் காலங்களில், கொடும்பாவி ஒன்று கட்டி அதைச் சுற்றிப் பாட்டுப்பாடிக் கும்மி அடித்துக் கொண்டு தெருவில் இழுத்துச் சென்று, ஊர்முனையில் எரித்துவிடுவர், அது காட்சிக்கு அழகாக இருந்தாலும், வேதனையின் வெளிப்பாடு அல்லவா ?

---

# கோவிவன்·

ஊர்ப்புறத்தே ஒரு வீரன் தனது ஊர் எருமை மந்தையைக் காத்திருந்தான். அப்போது கள்ளர்கள் எருமைகளைக் கவர வந்தனர்.போர் நிகழ்ந்தது. போரில் கள்ளர்களைத் துரத்தியபின் வீரனும் உயிரிழந்தான். அவனுடன் இருந்த அவனுடைய நாய், தலைவனுக்கு உதவியாக இரு கள்ளர்களைக் கடித்துத் துரத்தியபின் தலைவன் உடலைக் காத்து நின்றது. அந்நாயின் பெயர் கோவிவன் அவ்வீரனுக்கு நடுகல் எடுத்த மக்கள் அந்நாயின் உருவையும் செதுக்கி அதன் வீரத்தையும் எழுதி வைத்தனர்.

இந்த நடுகல் செங்கம் அருகில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது. அது 1300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த பல்லவன் மகேந்திரவர்மன் காலத்தியது. அதன் வாசகம் வருமாறு.

கோவிசைய மயிந்திர பருமற்கு
ஐப்பத்து நான்காவது வாணகோ
அரைசரு மருமக்கள் பொற்
றெக்கை ஆர் இளமகன் கருந
தேவக்கத்தி தன்னெருமைப்பு
றத்தே வாடிப்பட்டான் கல்.
கோவிவன் னென்னுந் நாய்
இருகள்ளனைக் கடித்துக் காத்
திருந்தவாறு.

பக்கத்தில் உள்ளது அந்த நாய்தான். அந்தத் தலைவனுக்கு சிலை வைத்த மக்கள் அவனுடைய நாய்க்கும் சேர்த்து வைத்தனர். நாய் மட்டும் தானா நன்றியுடையது. மக்கள் அதைவிட நன்றியுள்ளவர்கள் என்பது புலனாகிறது.

—நாராயணன்

# ஆயிரத்தெண்ணூறில் தமிழகம்

புக்கானன்

கி. பி. 1800 ஆண்டுவாக்கில், சென்னையில் ஆளுநராக இருந்தவர் தென்னகத்தின் மொழி, பண்பாடு, பயிர்வளம், தொழில் வளம் பழக்க வழக்கங்கள் வரலாறு, ஆகியவற்றைப் பற்றி அறிந்து கொள்ள விரும்பினர். புக்கானன் என்ற மருத்துவரை தக்க துணையுடன் தென்னகம் முழுவதும் சுற்றி விவரம் திரட்டி அறிக்கை தரும்படி பணித்தார். அவரது நாட் குறிப்பு மூன்று தொகுதிகளாக லண்டனில் பதிப்பிக்கப் பெற்றது இவை அதிலுள்ள விவரங்களாகும்.



*1800 நவம்பர் 3*

இன்று ஐந்து மலபார் மணி பயணம் சென்று திருப்பூர் அடைந்தேன், இங்கு நொய்யல் ஓடுகிறது. வரும்வழியில் ஒவ்வொரு கிராமத்திலும் பல பாழடைந்த வீடுகளைக் கண்டேன், மண், வள மில்லாதிருந்தாலும், வேலிபலமாக இருந்தது. நொய்யல் பவானி யை விடத் தாழ்ந்தது. ஆனாலும் நேற்று இரவு முழுவதும், வெள் ளத்தால் நிறைந்து ஓடியது. காலையில் வடிந்து விட்டது. நொய் யலைக் கடந்து மிஸ்டர் ஹருடிஸ்சின் மாவட்டத்தில் இருந்த திருப் பூரை அடைந்தேன். திருப்பூர் ஒரு திறந்த நகரம் (கோட்டை இல்லாதது); 300 வீடுகள் இருந்தன. பெரிய வாரச் சந்தை கூடுகிறது.

புதியவனை என்னைப் பார்க்க ஆர்வம் காட்டிய பெண்கள், மறைந்து கொண்டு பார்க்கவில்லை. ஆனல் கோயமுத்தூரிலும், நொய்யலுக்கு வடக்கேயும், என்னைப் பார்த்த பெண்கள், என் வழியை விட்டு ஓடி, செடிமறைவிலும், வேலி மறைவிலும் நின்று என்னைப் பார்த்தார்கள்.

இந்த மாவட்டத்தில் தாசில்தார் பாலார் என்ற இடத்தில் இருந்தார். அங்கு ஒரு கோட்டை இருந்தது. அதில் 30 வீடுகள் இருந்தன. அதில் பதினைந்து வீட்டில் பிராமணர் வசித்தனர். இந்த மாவட்டம் தென் வடலாக பதினைந்து மலபார் மணி தூர மும், கிழமேற்கில் பனிரண்டு மலபார் மணி தூரமும் உள்ளது, இங்கு பயிர் பண்ணாத நிலம். மேய்ச்சல் தரையாகப் பயன் படுகிறது. (இங்கு வழங்கும் நில அளவுகள், எடைகள், நாணய மதிப்பு நெல் பயிரிடும் முறை, பிறதானியங்கள் விளையும் அளவு முதலியவைகளைத் தருகிருர். (அதை விடுத்து மேலே செல்வோம்.)

நொய்யலாற்றில் 32 அணைகள் உள்ளனவாம். அதில் நான்கு இந்த மாவட்டத்தில் உள்ளன. அவைகள் பழுது பார்க்க வேண் டிய நிலையிலேயே உள்ளன. சில அணைகளிலிருந்து வரும் நீர் நேரா கக் கால்வாய்கள் மூலம் வயலுக்கே பாய்கிறது. பிற அணைகளி லிருந்து வரும் நீர் ஏரிகளில் நிரப்பிவைத்துக் கொண்டு, பின்னர் பயன் படுத்தப்படுகிறது.

இங்கு கொள்ளு அதிகமாக விளைகிறது. மெட்ராஸ் ஆங்கிலத் தில் இதை Horse-gram என்கின்றனர். தவிர சோளம், கம்பு, கேழ்வரகு, மேத்தி, ஜீரகம், தனியா, புகையிலை, பூண்டு, வெங்கா யம், தினை முதலியன தோட்டத்துப் பயிராக விளைகின்றன.

தாசில்தார், விளைவிக்கும் கணக்குகளையும் அதில் வருமானத் தும் எழுதிக் கொண்டு வந்து காண்பித்தார். அது தப்புக் கணக் காகத் தோன்றுகிறது. அவர் வாயடி ஆசாமி, (man of paper), அவர் தந்த புள்ளி விவரங்கள் ஒன்றும் நம்பத் தகுந்ததாக இல்லை.

அவர் இந்த ஊர்க்காரர் அல்லர். அதனல் அவருக்கு ஒன்றும் தெரியாதது பற்றி நான் ஆச்சரிய மடையவில்லை. இங்கு வாரச் சந்தைக்கு வந்த இரும்பு எங்கே உருக்குகிருர்கள் என்று அவருக்குத் தெரியவில்லை. அடுத்த மாவட்டமான சென்னிமலையிலிருந்து வந்ததாகச் சிலர் சொன்னுர்கள். (தொடரும்)

# இலங்கை

திருமதி. தாயம்மாள் அறவாணன்

---

(தமிழ் நாட்டில், திரும்பிய ஊருக்கெல்லாம் இராமன் வந்ததாகவும், அவர் தொடர்பான கதை ஒன்றும் வழங்கும். தலபுராணங்கள் அதை வெகுவாகப் பேசும். ஆனல் ஆராய்ச்சியாளர்கள் இதைப் பற்றி என்ன சொல்கிருர்கள் ?)

இலங்கை

இராமாயணத்தின் இன்றைய வடிவம் கி. பி. ஐந்தாம் நூற்ருண்டுக்கு முற்பட்டதல்ல; அக்கதையின் பகுதி இரும்புக் காலத்தையே (கி. மு. இரண்டாம் நூற்ருண்டு) சேர்ந்தது; இராமாயணத்தில் குறிக்கப்படும் இலங்கை, இன்றைய ஈழம் அல்ல என்ற தம் ஆராய்ச்சி முடிவுகளால், டாக்டர். எச். டி. சங்காலியா தெரிவித்திருக்கிருர். தன் கருத்துக்குத்தொல்லியல், பொருளியல், நிலவியல், பயிரியல் சான்றுகளையும் துணையாகக் காட்டுகிருர்.

இராமனல் வளைக்கப் பட்ட வில் இரும்பால் ஆனதே. வான்மீகி இராமாயணத்தில் குறிக்கப்படும் "காயாசா, ஆயாசா" போன்ற போர்க்கருவிகள் செம்பினல் செய்யப்பட்டவை அல்ல, இரும்பினல் செய்யப்பட்டவை. சீதை உடுத்திருந்த சீனத்துப் பட்டும் இராமன் முத்திரை மோதிரமும் இரும்புக் காலத்திற்கு முன் இந்தியாவில் புழங்கியவை அல்ல. முத்திரை மோதிரம் இந்தோ-கிரேக்க உறவால் இந்தியாவுக்கு வந்தது ஆதலின்-கணையாழிக்கதை கிரேக்கரது வரவுக்குப் பின்னரே சேர்க்கப் பட்டிருக்க வேண்டும்.

இராமாயணக்கதை இன்றைய உத்திரப் பிரதேசம், சோடா நர்கபுரி, கிழக்கு மத்தியப் பிரதேசம், பகுதிகளில் கி. மு. 1500 முதல் கி. மு. 700 வாக்கில் நடந்திருக்கலாம். லங்கா, கிட்கிந்தா நகரங்கள் கற்பனையாகவே புனையப் பட்டுள்ளன. எப்படியாயினும் அவை இன்றைய இலங்கையே அல்ல ; தென்னிந்தியப் பகுதியோடு தொடர்புடையன அல்ல. இராமாயணக் கவிஞர்கள் இப்பகுதிகளைத் தம் காலத்தில் அறிந்திருக்கவில்லை.

இதிகாசத்தில் அடிக்கடி குறிக்கப் படும் கோபுரங்கள், விமானங்கள் கி. பி. நான்காம் அல்லது ஐந்தாம் நூற்ருண்டுக்கு முற்பட்டனவல்ல. கோபுரத்தைப் பற்றிய முதற்குறிப்பு காரவேலனின்

அத்திகும்பா (இரண்டாம் நூற்றூண்டு) கல்வெட்டில்தான் காணப் படுகிறது. இவை கி. பி. 484–க்கு முற்பட்டவையல்ல. இந்நூலில் பாத்திரங்களாக வரும் இராட்சதர்கள், வானரர்கள் முதலியோர் சோடா நாகபுரி பீடபூமியைச் சேர்ந்தவர்களே. இவர்கள் காடு களில் வாழ்ந்தவர்கள் என்ற குறிப்பு இதை உறுதிப்படுத்துகிறது.

அறிஞர் பரமேஸ்வர அய்யர் மேற்கண்ட காட்டுப் பகுதி இன்றைய ஜெபல்பூருக்குக் கிழக்கே 13 கிலோ மீட்டர் தொலை வினில் உள்ளதாகக் குறித்துள்ளார். அவர் ஓர் அரிய பயிரியல் விளக்கமும்தந்துள்ளார். இராம இலக்குவர் எப்போதும் வில், அம்புகளையே பயன் படுத்துகின்றனர். மிகச்சில இடங்களில் வாளைப் பயன் படுத்துகின்றனர். ஆனல் வானரர்கள், இராட் சதர்கள் வில்லம்புகளையோ, வாளையோ பயன்படுத்துவதில்லை. அவர்கள் எப்போதும் சாலா, மரங்களையே பயன்படுத்தினர்.

சாலா மரங்கள் அமர்கண்ட் பீடபூமி, சோடா நாகபுரி, அஸ் ஸாம் காடுகளிலே வளர்கின்றன. இவை மராட்டியம், தென்னிந் தியா, இலங்கைப் பகுதிகளில் இல்லை. ஆதலால் வானரர். இராட் சதர் வாழ்ந்த பகுதி தென்னிந்தியாவும் இல்லை என்பதை உறுதி யாக்குகிறது.

இலங்கை அறிஞர் டாக்டர். பரனுவிதானர். என்பவரும் இராமாயன 'லங்கா' இன்றைய இலங்கை அல்ல என்று மறுத் துள்ளனர்.

பிற அறிஞர் கருத்துக்கள்

சர்தார் கிபே என்பவர் விந்தியமலைச் சாரலிலுள்ள 'சோலி' என்பார். பான் நாட்டறிஞர் ஜாகோபி, ஜைன இராமயணம் 'பாம்சாரியானில்' குறித்தபடி ஆய்ந்தால், லங்கா அஸ்ஸாம் மலைக் காட்டில் உள்ளது என்பார். என். எஸ். அதிகாரி என்பார் இன் றைய சுமெரியாவே பழைய இலங்கையாக இருத்தல் கூடும் என் பார். வி. எச். வாடேர் இந்து மாக்கடலுள் உள்ள மால்டிவ் தீவு கள் 'லங்கா' என்கிருர்.

எப்படியிருந்தாலும் இந்த ஆராய்ச்சியை மேற்கொள்ள, நம் கம்ப இராமாயணம் உதவாது. வடமொழியில் இயற்றப்பட்ட இராமாயணமும், சைன இராமாயணமும், பிற பழைய இராமா யணக்கதைகளும் நன்கு அறிந்திருக்கவேண்டும். ஃ

# கொங்கு முதல் தொகுதி (1971)

## பொறியியல்



## தொல்லியலும், வரலாறும்

குறிப்பு : எண்கள் பக்க எண்களைக் குறிக்கின்றன.

முதல் தொகுதி விலை ரூ 5/= வேண்டுவோர் எழுதுக.

---

நுட்பச் சொற்றெகை 4

| | | |
|---|---|---|
| Staircase | — | மாடிப்படி |
| Landing | — | படிநடை, படிமேடை |
| Handrail | — | கைப்பிடி வாரை |
| Parapet | — | கைப்பிடிச் சுவர் |
| Corridor | — | நடை |
| Balcony | — | முன்மாடம் |
| Valley | — | கூடுவாய், கூடல் |
| Ridge | — | முகடு |
| Beam | — | விட்டம், உத்தரம் |
| Rib | — | தண்டு |
| Joist | — | சட்டம், வளை |
| Frame | — | சட்டகம் |
| Structure | — | கட்டுக்கோப்பு, கட்டமைப்பு |
| Rafters | — | கை, வெட்டுக்கை |
| Verandah | — | தாழ்வாரம் |
| Wall Piece | — | சுவர் வாரை |
| Ridge piece | — | முகட்டு வாரை, முகட்டுவளை |
| Slab | — | பலகை |
| Floor | — | தளம், மாடி |
| cellar | — | நிலவறை |
| Lean fo roof | — | ஒற்றைச் சாய்ப்பு |
| Portico | — | முன்றில் |
| Span | — | துறை, கண். திறப்பு |
| Loft | — | அட்டாளி, பரண். |
| Pial | — | திண்ணை |

—நுட்பச்சொல் ஆணையம்.

# கொங்கு

அறிவியல், வரலாற்று திங்களிதழ்

ஓரிதழ் 25 காசு ஆண்டு சந்தா ரூ 3.

1. பணவிடை மூலம் அனுப்புவோர். அஞ்சற்கட்டணத்தைக் குறைத்துக் கொண்டு அனுப்பலாம்.

2. மூன்று ரூபாய் postal order வாங்கியும்அனுப்பலாம். நிர்வாகி கொங்கு என்ற முகவரியும், அடையாறு அஞ்சலகம் என்றும் குறிப்பிட வேண்டும்.

3. பணவிடைத்தாளின் அடியிலும், postal order இன் பின்பக்கத்திலும் அனுப்புவோர் முகவரி எழுத வேண்டும்.

4. ஊராட்சி ஒன்றியங்களுக்கு வாங்குவதற்கான கிராம வளர்ச்சி இயக்குநர் ஆணை மூ. மு. எண் 15850-71 கே 3 நாள் 17-2-71.

5. திருக்கோயில் நூலகங்களுக்கு வாங்குவதற்கான இந்து அற நிலைய ஆணையாளர் உத்தரவு எண்; கே. டிஸ் 38571/71 நாள் 27-7-71.

6. பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் நூல்கள் வாங்குவதற்கு அந்தந்த தலைமை ஆசிரியர்களுக்கும், முதல்வர்களுக்கும் அதிகாரம் உண்டு என பள்ளிக் கல்வி, கல்லூரிக் கல்வி இயக்குநர்கள் தெரிவித்துள்ளனர்.

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

நிர்வாகி, கொங்கு, 26, இந்திரா நகர், சென்னை-20

# சென்னை நக்கீரர் கழகத்து நற்பணிகள்

## 1. திருவள்ளுவர் தமிழ் கல்லூரி :

1944 முதல் நல்ல முறையில் நடைபெற்று வருகிறது. வித்து வான், புகுநிலை, முதனிலை, நிறைநிலை, தமிழ் முதுகலை (எம்.ஏ.,) வகுப்புகள் தொடர்ந்து நடைபெறுகின்றன. ஞாயிறு நீங்கலாக ஒவ்வொரு நாளும் மாலை 6-15 மணி முதல் 7-45 மணி வரை வகுப்புகள் நடைபெறும்.

இடம் : ஏ. ஆர். சி. மகளிர் பள்ளி, 44, பவழக்காரத் தெரு.
மண்ணடி, சென்னை-1.

### சிறப்புப் பணிகள் :

'சைவம்'' பற்றிய சிறப்புச் சொற்பொழிவுத் தொடர் தொடங்கியுள்ளது. ஒவ்வொரு திங்களின் இரண்டாம் நான்காம் செவ்வாயன்று சொற்பொழிவுகள் நடைபெறும்.

''வைணவம்'' பற்றிய சிறப்புத் தொடர் சொற்பொழிவுகள் தொடங்கப் பெற்று ஒவ்வொரு திங்களின் இரண்டாம் சனிக் கிழமை நடைபெற்று வருகிறது.

## 2. மறைமலையடிகள் ஆராய்ச்சிக் குழு :

மேற்படி பள்ளியிலேயே திங்கள் தோறும் சிறந்த பேரா சிரியர்களைக் கொண்டு, சிறந்த சொற்பொழிவுகள் நடைபெறு கின்றன.

## 3. பேராசியர் கா. நமச்சிவாயர் நூல் நிலையம் :

படித்துப்பயன் பெறத்தக்க சிறந்த பல நூல்கள் உள்ளன.

## 4. டாக்டர் தருமாம்பாள் மகளிர் இலக்கிய வட்டம் :

இலக்கியம், சமூகவியல், அரசியல், பண்பாடு ஆகிய துறை களில் மகளிர் விளக்கம் பெற்றுக் கொள்ள, சனிக்கிழமை தோறும் பிற்பகல் 3 மணி முதல் 4 மணி வரை தொடர் சொற்பொழிவு கள் நடைபெறுகின்றன. சிறந்த பெண்பால் ஆசிரியர்கள் பங்கு கொள்கின்றனர்.

இடம் : ''தமிழகம்'' 27, பிள்ளையார் கோயில் தெரு,
தண்டையார்ப்பேட்டை; சென்னை-31.